[11th December 1961

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் தமிழ்நாட்டில் ரயில்வே போக்குவரத்து வசதிக்காக எவ்வளவு தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது? அந்தத் தொகைக்குரிய வேலைகளாக ஏற்பாடு செய்யப்பட்டுள்ளவை எவை?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்தத் தகவல்கள் என்னிடம் இல்லை.

*Houses for Harijans (Athur taluk)*

*2240-C *Q.*—SRI T. IRUSAPPAN : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சேலம் மாவட்டம், ஆத்தூர் தாலுகா, நல்லாநந்தம், தாண்டவராயபுரம், ஆனியம்பட்டி, கடம்பூர், மணிவெளுத்தான், செக்கடிபட்டி, மேட்டுடையாம்பாளையம் கிராமங்களிலுள்ள ஹரிஜனங்கள், தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்தவர்கள், வீடுகட்டுவதற்காக வாங்கிய சர்க்கார் கடனை வசூலிப்பதற்காக அவர்கள் வீடுகளை ஜப்திசெய்து, வெளியேற்றப்படுவது சர்க்கார் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டதா?

(இ) அப்படியானால், அதைத் தடுக்க சர்க்கார் எடுத்துக் கொண்ட நடவடிக்கை என்ன?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) No. Sir.
(*b*) Does not arise.

SRI T. IRUSAPPAN : தலைவர் அவர்களே, தாழ்த்தப்பட்ட மக்களுக்காக சர்க்காரால் சில வீடுகள் கட்டப்பட்டிருக்கின்றன; சில வீடுகள் அவர்களுக்கு கடன் வசதி கொடுக்கப்பட்டு கட்டப்பட்டிருக்கின்றன. அவர்கள் அன்றாடம் வாழ்க்கை நடத்த முடியாமல் கஷ்டப்படுகின்ற நேரத்தில் இப்போது வீடுகளுக்காக பணம் கட்டவேண்டுமென்று தொந்திரவுகள் செய்கிறார்கள். இதை சர்க்காரே ஏற்று, அந்தப் பணத்தை தள்ளுபடி செய்வதற்கு உத்தேசம் உண்டா? அல்லது இதைப்பற்றி சர்க்காரின் நிலை என்ன?

THE HON. SRI C. SUBRAMANIAM : கேள்வி கேட்டது, வீடுகள் ஜப்தி செய்யப்பட்டு, அங்கிருந்து அவர்கள் வெளியேற்றப்பட்டனரா என்பது. அப்படி செய்யப்படவில்லை என்று பதில் சொன்னபோது, இந்தக் கேள்வியை எப்படிப் போடலாம்.

SRI M. K. SOMASUNDARAM : ஸார், இந்த மாதிரி இவர்களை வெளியேற்றப்படக்கூடிய நிலைமை ஏற்பட்டால், அவர்களை வெளியேற்றாமல் தடுப்பதற்கு தக்க நடவடிக்கைகள் எடுக்கப்படுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : நான் வெளியேற்றப்படவில்லை என்று பதில் சொன்னபோது, நடவடிக்கை எடுப்பது என்பது இந்தக் கேள்வியில் இருந்து எழவில்லை.

11th December 1961]

**SRI T. IRUSAPPAN** : தலைவர் அவர்களே, அவர்கள் வைத்திருக்கக்கூடிய பாத்திரங்கள், ஆடு மாடுகள் போன்றவைகள் ஏதாகிலும் இதற்காக ஜப்தி செய்யப்பட்டிருக்கிறதா ? இம்மாதிரி புகார் ஏதாவது வந்திருக்கிறதா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM** : அந்தமாதிரி எவ்விதமான புகாரும் வரவில்லை.

*Ongur river (Irrigation)*

2240-D *Q.*—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Government have received a petition, dated 23rd April 1961, from the ryots of the village of Vellankonda-Agaram regarding the utilization of the waters of the Ongur river for irrigation purposes; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

(*b*) Does not arise. Plans and estimates for an anicut across Ongur river near Arasur are however under scrutiny.

*New High School (Gudiyatham taluk).*

* 2240-E *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கனம் முதல் அமைச்சர் அவர்களுக்கு ஜூலை 18, 1961-ல் வி. கே. கோதண்டராமன், எம்.எல்.ஏ., அவர்கள்மூலம் குடியாத்தம் தாலூக்காவில் மோட்டூர், வளத்தூர், செம்பள்ளி, குடியாத்தம் டவுன்களில் உயர்தர பாடசாலைகள் ஏற்படுத்துவது விஷயமாக எழுதப்பட்ட லெட்டர் சேர்ந்ததா ?

(இ) அப்படியானால், அதன்மீது எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes, Sir.

(*b*) A high school has been permitted to be opened at Valathur. The Government have not received proposals either from District Board (since defunct) or from the Director of Public Instruction regarding the opinion of a high school at S. Mottur. The proposals for the opening of high schools at Sempalli and Gudiyatham town were not approved by the Government.

**SRI V. K. KOTHANDARAMAN** : ஸார், வட ஆற்காடு ஜில்லாவிலே இருக்கக்கூடிய 11 தாலூகாவிலே மிக அதிகப்படியான ஜனத்தொகை கொண்டது குடியாத்தம் தாலூகா. அப்படி இருக்கும்போது மற்ற தாலூகாக்களைவிட பத்தாவதான நிலையிலே ஏழு ஹைஸ்கூல்கள்தான் இந்த தாலூகாவில் இருக்கிறது. மற்ற தாலூகாக்களில் 10, 12, 15 என்றிருக்கிறது. இதுபோன்ற பாகுபாடு காட்டக்கூடிய முறையிலே அனுமதி கொடுப்பதற்கான காரணம் என்ன ?